24th March 1958]

**Sri A. V. P. ASAITHAMBI** : ராமனாதபுரம் மாவட்டத்திற்கு 1956-57ல் 1·65 லட்ச ரூபாயும் 1957–58–ல் 8·13 லட்ச ரூபாயும் இந்தத் திட்டங்களுக்காக ஒதுக்கப்பட்டது என்று கனம் அமைச்சர் தமது பதிலில் தெரிவித்திருக்கிறார். இந்தப் பணம் எவ்வாறு பயன்படுத்தப்பட்டது? மொத்த பணத்தில் பயன்படுத்தப்படாமல் ஏதாவது தொகை மிஞ்சியதா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : ராமனாதபுரம் ஜில்லாவைப் பொறுத்தவரையில், ஜமீன் பிரதேசங்களாக முன்பு இருந்துவந்த பல கண்மான்யங்களை இப்போது சீர்த்திருத்த வேண்டியிருக்கிறது. இந்த வேலைகள் அங்கே அதிகமாக இருக்கின்றன. இந்தத் திட்டம் முதலில் பரிசீலனை செய்யப்பட்டது. பரிசீலனை செய்யப்பட்ட பிறகு அந்த வேலைகள் எடுத்துக் கொள்ளப்பட்டு நடத்தப்பட்டுவருகின்றன.

**Sri S. M. ANNAMALAI** : சிறுபாசனத் திட்டங்களுக்காக வட ஆற்காட்டிற்கு 1956–57-ம் ஆண்டில் 4·76 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டது என்று முன்பு பதிலளிக்கும்போது கூறினார். ஆனால் அதே 1956–57-ல் ஆண்டில் 4.72 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டது என்று இப்போது பதில் கூறியிருக்கிறார். அதே மாதிரி, அந்த ஜில்லாவிற்கு 1957–58-ம் ஆண்டில் 5·04 ரூபாய் ஒதுக்கப்பட்டதென்று முந்தைய பதிலிலும் 5·05 ரூபாய் ஒதுக்கப்பட்டதென்று இப்போதைய பதிலிலும் கூறியிருக்கிறார். இவைகளில் எவை சரியானவை?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : செலவு செய்யப்பட்ட தொகை வேறு, ஒதுக்கப்பட்ட தொகை வேறு. அதுதான் வித்தியாசம்.

**Sri V. K. KOTHANDARAMAN** : தென்னாற்காடு ஜில்லாவும், வட ஆற்காடு ஜில்லாவும் செங்கற்பட்டு ஜில்லாவை விட வறண்ட பிரதேசங்கள். அப்படியிருந்த போதிலும், இந்த இரு ஜில்லாக்களுக்கும் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகைகள் செங்கற்பட்டு ஜில்லாவிற்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையைவிட மிகவும் குறைவாக இருப்பதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்த விஷயத்தில், ஜில்லாக்களுக்குள் போட்டாப்போட்டி இல்லை. எந்த எந்த ஜில்லாவிற்கு எவ்வளவு தொகை தேவை என்பதையும், எவ்வளவு தொகை ஒதுக்குவது சாத்தியம் என்பதையும் பார்த்துத்தான் பணம் ஒதுக்குகிறோம்.

## *Co-operative Societies*

* 384 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN** : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the names of co-operative societies closed since 1952 (figures yearwise and districtwise) ;

(*b*) the reasons therefor; and

(*c*) the total amount misappropriated?

**The Hon. Sri R. VENKATARAMAN** : (*a*) 1,201 societies have been closed between 1952 and 1957. The usefulness of the information asked for is not commensurate with the cost and labour involved in collection of the data.

(*b*) The reasons for closing down are generally their bad financial condition and unsatisfactory working. The registration of societies is cancelled only if all attempts by the Department to revive them fail.

(*c*) Rs. 6,90,101·80 nP.

[24th March 1958

**Sri V. K. KOTHANDARAMAN** : லட்சக்கணக்கான ரூபாய்கள் கையாள் பட்டு நூற்றுக்கணக்கான ஸொஸைட்டிகள் மூடப்படக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கும் நிலையில், கையாடல்களைத் தடுப்பதற்கு சர்க்கார் என்ன தீவிர நடவடிக்கை எடுத்திருக்கிறது? இதுவரை ஒரு தீவிர நடவடிக்கையும் எடுக்காவிட்டாலும் இனிமேலாவது தீவிர நடவடிக்கை எடுத்து இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு சர்க்கார் முயற்சி செய்வார்களா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : எப்படிப்பட்ட தீவிர நடவடிக்கை என்று கனம் அங்கத்தினர் குறிப்பிட்டால், அதை சர்க்கார் பரிசீலனை செய்யும்.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Can the Government tell us, Sir, whether the department has entirely collected the amounts so far misappropriated and if not what is the balance to be recovered?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, this is a matter running over five years and if we take the accounts for a period of ten years, the figure would be much more. Actually these figures are not so appalling as hon. Members would try to show. Every effort is made by the Department to collect these things. But naturally, proceedings in the courts will take a long time. If the hon. Member wants to know how much has been collected in 1952 to 1957, he may put a separate question. But I may tell him that the cost and labour involved will not be worthwhile collecting that information.

Sri M. JAGANNATHAN : May I know how, in spite of Government supervision and inspection by the Co-operative Inspectors, these huge sums were misappropriated by the societies?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, there is the human element in it. It is due to mismanagement by the Board of Directors and occasionally to defalcation by the persons concerned.

Sri T. T. DANIEL : May I know the approximate amount which the Government think that they could recover from out of the misappropriated amounts?

The Hon. Sri R. VENKATARAMAN : The Govenment want to recover every pie of the amounts misappropriated.

**Sri V. K. KOTHANDARAMAN** : பல வருஷ காலமாக விசாரணை செய்யாமல் விடுவதன் காரணமாக இதுபோன்ற ஊழல்கள் மேலும் மேலும் அதிகரிக்கின்றன. ஆகவே, ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மேற்பட்டால், அதாவது 3 முதல் 6 மாதங்களுக்கு மேற்படாமல், அதற்காக தனி அதிகாரி நியமித்து உடனுக்குடன் விசாரணை செய்து, அதற்குத் தீர்வு காணுவது மூலமாக இதுபோன்ற ஊழல் ஏற்படாது என்பது என் னுடைய அபிப் பிராயம்.

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் கேள்வி கேட்கிறபோது அவருடைய அபிப்பிராயத்தை பதிலாகக் கொடுத்துவிட்டு போட்டிருக்கிறார். நான் ஆரம்பத்தில் சொன்னேன். இதில் நடவடிக்கை எடுப்பதில் எந்தவிதமான காலதாமதமும் இல்லை. நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று சொன்னால், சட்டப்படிதான் எடுக்கவேண்டும். சட்ட பூர்வமாக அவர்கள் பல கோர்ட்டுகளுக்குச் செல்வதால் அதைத் தொடர்ந்து நடத்த வேண்டியிருக்கிறது. அதனால்தான் காலதாமதம் ஏற்படுகிறது.

24th March 1958]

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் தம்முடைய அபிப்பிராயத்தை சொல்லக்கூடாது. கேள்விதான் போடவேண்டும்.

SRI A. V. P. ASAITHAMBI : 1952-லிருந்து 1957 வரைக்கும் மூடப் பட்ட கூட்டுறவு சங்கங்களில் விருதுநகர் நாஷனல் கூட்டுறவு சங்கமும் ஒன்று. நிர்வாகிகள் மோசடி செய்ததன் காரணமாகத்தான் அது மூடப் பட்டது. அவர்கள் பேரில் இதுவரை என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது. காங்கிரஸ்காரர்கள் என்பதற்காக அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கப்படா மல் இருக்கிறது என்று மக்கள் பேசிக்கொள்கிறார்களே, அது உண்மையா ?

MR. SPEAKER : I think this question must be disallowed. I have to disallow the question. மூலக் கேள்வி தனிப்பட்ட ஒரு சொஸைடி யைப்பற்றியதல்ல. கேள்விநேரத்தில் இப்படி insinuation பண்ணக்கூடாது.

SRI S. LAZAR : இதுபோன்ற ஊழல்கள் நிறைந்திருப்பதால் நிர்வாகப் பொறுப்பிலிருக்கும் அங்கத்தினர்களுக்கு குறிப்பிட்ட சில யோக்கியதாம் சங்கள் இருக்கவேண்டுமென்ற முறையிலே கட்டுப்பாடு ஏதாவது விதிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஊழல்கள் ஏராளமாக இருக் கின்றன என்று கனம் அங்கத்தினர்கள் சொல்லிச் சொல்லி கேள்விகள் போடுவதை நான் மறுக்கிறேன். சாதாரணமாக, நடைமுறையில் இந்த நாட்டில் எந்த அளவுக்கு பிற துறைகளிலும், தனியார் துறைகளிலும் ஊழல்கள் இருக்கின்றனவோ அவைகளைவிட அதிகமாக கூட்டுறவு சங்கங்க ளில் இல்லை என்று நான் திட்டவட்டமாகச் சொல்லுகிறேன். அடுத்தபடி யாக, தகுதியுள்ளவர்களை நியமிக்கவேண்டுமென்று சொல்வது ஜனநாயகத் திலே எல்லோருக்கும் சந்தர்ப்பம் அளிக்கவேண்டும் என்ற கொள்கைக்குப் புறம்பாக இருக்கிறது என்பதனால் அந்த யோசனையை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

SRI T. S. RAMASWAMY PILLAI : May I know from the Hon. Minister the number of persons involved in this misappro-priation case and the number against whom criminal proceedings have been taken by the Government?

THE HON. SRI R. VENKATARAMAN : In fact, against every one proceedings have been taken.

SRI T. KARIA GOUNDER : சபாநாயகர் அவர்களே, காங்கிரஸ்காரர்கள் அல்லாதவர்களும் இந்த ஊழலில் சம்மந்தப்பட்டிருப்பார்களா என்று கனம் மந்திரி அவர்கள் தெரிவிக்க விரும்புகிறேன்.

MR. SPEAKER : நான் அப்படிப்பட்ட கேள்வியை கேட்கவேண்டாமென்று சொன்னேன். The question is disallowed.

SRI K. ANBAZHAGAN : கூட்டுறவு இலாகாவில் ஊழல்கள் ஏற்படுவதைத் தவிர்ப்பதற்கு ஒரு சிறந்த வழியாக அங்கே கையாளப் படும் கணக்கு முறைகளில் புதிய வழி முறைகளை ஆராய்ந்து ஒழுங்கான முறையிலே கணக்கு வைப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது நாம் செய்திருக்கிற புதிதான முறைப்படி, கணக்குகளைத் தணிக்கை செய்வதைத் தனி யாகவும், மேற்பார்வையிடுவதைத் தனியாகவும் பிரித்திருக்கிறோம். That is separation of audit from administration of Co-operative Department.

"ஆடிட்"க்குத் தலைமை அதிகாரியாக ஒரு அக்கௌண்ட்ஸ் ஆபீசரை நியமித்திருக்கிறோம். தணிக்கை செய்வது நிர்வாகத்திலிருந்து பிரிக்கப்பட்டிருப்பதால் ஓரளவு இன்னும் நல்ல முறையிலே பரிசீலனை நடக்கும் என்று நான் நம்புகிறேன்.

[24th March 1958

SRI V. K. KOTHANDARAMAN: பொதுத் துறையிலும் தனித் துறையிலும் இருப்பதைவிட இதில் குறைவு என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அப்படியானால் பொதுத்துறையில் இதைவிட ஊழல் அதிகம் என்று கனம் மந்திரி அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறாரா ?

THE HON. SRI R. VENKATARAMAN : I have no answer.

* 385 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri M. P. Sarathi) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of co-operative societies started for the benefit of Government servants alone;

(*b*) the total number of members in them; and

(*c*) whether the Government are giving any financial aid to them?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) 206 as on 30th June 1957. This includes all types of societies.

(*b*) 99,257 as on 30th June 1957.

(*c*) Government are not giving any aid generally to Employees' Credit Societies. For special types of societies, like co-operative canteens, Co-operative Workshop Stores, etc., interest-free loans are advanced and free services of departmental staff are lent in the initial stages of their working on the merits of each case. building societies organized for the general public.
building societies organizedfor the general public.

SRI A. V. P. ASAITHAMBI : அரசாங்க ஊழியர்களுக்காக நடத்தப்படும் கூட்டுறவு சங்கங்களில் ஏதாவது ஊழல் நடந்து மூடப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தனிக் கேள்வி வேண்டும்.

SRI N. K. PALANISAMI : ஏற்கனவே அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட கடன்களைத் திருப்பி வாங்கும் வரையில், அதற்காக குறைந்த வட்டி வாங்குவதற்குச் சர்க்காருக்கு யோசனை இருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படி ஒன்றும் யோசனை இல்லை.

* 386 *Q.*—SRI K. RAMACHANDRAN (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Handloom Co-operative Societies in the Shencottah Town have applied for any loans; and

(*b*) if so, when they applied and when they were sanctioned?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) There are two Weavers' Co-operative Societies in Shencottah Town. The Shencottah Handloom Weavers' Co-operative Society applied on 4th March 1957 for share capital and working capital loans. They were disbursed on 26th June 1957 and 30th July 1957 respectively. The Shencottah Illathar Weavers' Co-operative Society applied for a share capital loan on 25th July 1957 and the loan was disbursed to it on 31st July 1957. This society has applied to the Tirunelveli District Co-operative Central Bank for a working capital loan and it is now under the consideration of the Central Bank.